உ

சிவமயம்

# திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்

# சிவஞானபோதம்

(உரையுடன்)



ஸ்ரீ மெய்கண்டார் ஸ்ரீ அருள்நந்தி சிவம் ஸ்ரீ மறைஞான சம்பந்தர் ஸ்ரீ உமாபதி சிவம்




தருமை ஆதீனம்

2010

வெளியீடு எண். 1057

உ

குருபாதம்

# திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்
# சிவஞானபோதம்

(கா.சு.பிள்ளை உரையுடன்)

இச்சாத்திர நூல்கள்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த**

**பரமாசாரிய சுவாமிகள்**

திருவுளப்பாங்கின்வண்ணம்

**ஆவணி மூல விழா மலராக**

ஞானசம்பந்தம் பதிப்பகத்தில்

வெளியிடப்பெற்றது.

தருமையாதீனம்
19-08-2010

கல்லூரியைப் புரந்தருளும்

தருமை ஆதீனம் இருபத்தாறாவது குருமகா சந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# உள்ளுறை

உ

குருபாதம்

## குரு வணக்கம்

******

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞாம்

பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்

கண்டவர்இ தயகமல முகைக ளெல்லாங்

கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்

விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவும்

மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்

புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்

பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வோம்.

# முன்னுரை

"உந்தி களிறே உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்த அருள்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று"

முப்பொருள்களின் இயல்பைத் தெள்ளத்தெளிவாக உள்ளவாறு உணர்த்துவன மெய்கண்ட சாத்திரங்கள். அவை பதினான்கு. அப்பதினான்கினுள் முதலில் அமைந்துள்ள மூன்று நூல்கள் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞானபோதம் என்பதை மேற்காணும் வெண்பா மூலம் அறியமுடிகின்றது. இந்நூல்கள் சாத்திரக் கருத்துக்களை இனிது விளக்குகின்றன.

திருவியலூர் உய்யவந்த தேவ நாயனாரால் இயற்றப்பட்ட திருவுந்தியார் 45 பாக்களில் சாத்திரக் கருத்துகளை இனிது விளக்குகின்றது. இவ்வாசிரியரின் சீடர் திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் தம் ஆசிரியர் எழுதிய திருவுந்தியாருக்கு விளக்கமாகத் திருக்களிற்றுப் படியாரை இயற்றியுள்ளார்.

தில்லையில் எழுந்தருளியிருந்து அதிபக்குவர்க்கு விளக்க திருக்களிற்றுபடியாரை எழுதி, பின் உலகம் இந்நூலால் பயன்பெற வேண்டும் என்ற கருணையோடு தில்லை நடராஜப் பெருமான் சந்நிதியில் திருக்களிற்றுப் படியில் வைத்தார். கல்யானை உயிர்த்து எழுந்து அந்நூலைத் துதிக்கையால் எடுத்து நடராஜப்பெருமான் திருவடியில் சார்த்தியது. அந்நூலின் பெருமையை வியந்து உணர்ந்து எல்லோரும் திருக்ளிற்றுப்படியார் என்றே வழங்குவராயினர்.

சைவ சித்தாந்த நூல்களின் முடிமணியாக விளங்குவது மெய்கண்ட தேவநாயனார் அருளிய சிவஞானபோதம். "மெய்கண்டான் நூல் சென்னியிற்கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றாம்" என்பது அருணந்திதேவ நாயனாரின் வாக்கு. இச்சிவஞான போதத்தின் செம்பொருளைச் சைவர்கள் மட்டுமின்றி மெய்ப் பொருளை அறிய விழையும் உலகமாந்தர்கள் அனைவருமே அறிந்து உணரவேண்டுவது இன்றியமையாதது. செய்யுள் வடிவில் அமைந்த இந்நூலுக்கு விளக்கமாக அமைந்தது சிவஞான சித்தியார் ஆகும்.

இத்தகைய சிறப்புடைய இம்மூன்று நூல்களையும் **தருமை ஆதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** திருவுளபாங்கின் வண்ணம் முன்பு தனித்தனியாக வெளியிடப்பெற்றதை இப்போது ஒன்றாக இணைத்து ஆவணி மூல விழா மலராக வெளிவருகின்றது. இந்நூலினை தமிழ்கூறும் நல்லுலகமும், சித்தாந்த சைவச் செந்நெறி உலகமும் பெற்று பயன்பெறுவதாக.

இங்ஙனம்
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
உத்திரவுப்படி
முனைவர். **மௌன குமாரசாமித் தம்பிரான்**
மௌன மடம் கட்டளை விசாரணை,
திருச்சிராப்பள்ளி



## தருமை ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

## தருமை ஆதீனத்தை நிறுவியருளிய

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருநதுவிடம் தெரிந்தி டாமல்
தாரணி அன்பயைன அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடிய சொழிற கமலை வேந்தன்.
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன் இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

- ஸ்ரீ சம்பந்தசரணாலயர்

ஸ்ரீ வில்லிபுத்தூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் சுப்பிரமணியப் பிள்ளைக்கும் மீனாட்சியம்மைக்கும் அருந்தவ மகவாக அவதரித்தார் குருஞானசம்பந்தர். மதுரையம்பதிக்குத் தம் பெற்றோருடன் சென்று குலதெய்வமாகிய ஸ்ரீ சொக்கநாதரை வழிபட்டார்; திருவருளால், பொற்றாமரைக் குளத்தில் ஈசானமூலையில் பெட்டகக் கோயிலுடன் சொக்கநாதர் கண்ணுக்கினிய பொருளாகக் கைவரப் பெற்றார்; சொக்கேசன் அருளியபடி திருவாரூர் சென்று ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரை வணங்கிச் சிவஞான உபதேசம் பெற்றார்; சொக்கநாதர் பூசையும், எழுந்தருளச் செய்து கொடுக்கப்பெற்றார். குருவாணைப் படித் தருமபுரத்தில் அமர்ந்து பக்குவான்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்து சைவ சித்தாந்தத்தைப் பரவச்செய்தார். தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதர் மீது சொக்கநாத வெண்பாப்பாடித்

துதித்தார். சிவ்போகசாரம், முத்தி நிச்சயம், சொக்கநாதக் கலித்துறை, ஞானப்பிரகாசமாலை சோடசகலாப் பிராசாதசட்கம், திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல், நவரத்தினமாலை ஆகிய நூல்களையும் அருளி சைவசித்தாந்த நெறியைப் பரவச்செய்தார்.

இவ்வாறு பல்லாண்டுக்காலம் ஞான அரசாட்சி புரிந்து சிவலிங்கத் திருவுருவின் கீழ் சீவசமாதி கூடினார் ஸ்ரீகுருஞான சம்பந்தர். அவர் சீவசமாதி கூடிய குருமூர்த்தமே தற்பொழுது ஞானாம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலாக விளங்கி வருகிறது. கி.பி. 16ம் ஆம் நூற்றுண்டில் ஸ்ரீகுருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப் பெற்ற இத்தருமையாதீனத் திருமடம் மொழித் தொண்டும், சமயத் தொண்டும், சமூகத் தொண்டும் ஒல்லும் வகையெல்லாம் ஆற்றி வருகின்றது. ஸ்ரீ குருஞான சம்பந்தரது பரம்பரையில் தற்பொழுது 26 ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள்.

❄❄❄❄❄❄❄



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## திருவியலூர் உய்யவந்ததேவ நாயனார் அருளிச்செய்த

# திரு உந்தியார்

*அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்ததென் றுந்தீபற*
*தானாகத் தந்ததென் றுந்தீபற.* 1

இயல்பாகவே மலமற்றதாய். யாரும் அறிதற்கரியதொரு பரம்பொருளாகிய சிவபெருமான், தவமுதிர்ச்சியால் பக்குவமடைந்த உயிர்களுக்கு அருள் புரியும் பொருட்டு ஆசிரியனாய்த் திருமேனிகொண் டெழுந்தருளிவந்து பரஞானத்தைக் கொடுத்து அவைகளைத் தன் தன்மை எய்தும்படி செய்தருளுவன்.

*பழக்கந் தவிரப் பழகுவ தன்றி*
*உழப்புவ தென்பெணே உந்தீபற*
*ஒருபொரு ளாலேயென் றுந்தீபற.* 2

திருவடிப்பேரறிவு பெற்ற பின்னும் நெடுநாட் பழகிய பழக்கத்தால் ஏற்படும் மல வாசனையை, ஒப்பற்ற திருவருள் வயமாய் நின்று ஒழிக்கப் பழகுதல் வேண்டும்.

*கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்*
*பிண்டத்தில் வாராரென் றுந்தீபற*
*பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற* 3

ஆசிரியனாய் வந்த கடவுள் நல்கிய ஞானத்தைக் கொண்டு, நிட்டைநிலை கைகூடப் பெற்றவர் மீண்டும் பிறவார் என்றறிக.

இங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ங னிருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற. 4

சிவானந்தமானது இவ்வாறிருந்ததென்று சொல்ல முடியாது: ஏனெனில், அது சுட்டறிவினால் அறியத்தக்க தன்று.

ஏகனு மாகி அனேகனு மானவன்
நாதனு மானானென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற. 5

ஒரே பரம்பொருளாகிய பெருமான் பல்லுயிருக்கும் உயிராய் நின்றும் ஐந்தொழில் நடாத்தியும் தலைவனாய் நிற்கின்றனன். அவனே நமது ஆண்டவன்.

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற. 6

நம் செயலென்பதும் நாமென்பதும் அற்றபின் எல்லாச் செயலும் இறைவன் செயலென்பது விளங்கும். அவன் தன்னையே நமக்குத் தந்தானென்று மகிழ்வோமாக.

உள்ளம் உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற. 7

உள்ளம் உருகினாற்றான் அவர் உடனிற்பது விளங்கும்: அல்லாத இடத்து அவரைத் தெளிந்தறிதல் இயலாது: அவர் கரணாங்கடந்த மேலான ஞானச் செல்வரென்றறிக.

ஆதாரத் தாலே நிராதரராத் தேசென்று
மீதானத் தேசெல்க உந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற. 8

சுட்டியறியும் ஆறு ஆதாரங்களில் அவனை வழிபட்டு யோக சமாதி யடைந்தபின் சுட்டற்ற மேலிடத்தே செல்க: அதுதான் பாசமற்ற பெருமானுக்கு இடம் என்று அறிக.

*ஆக்கில்அங் கேயுண்டாய் அல்லதங் கில்லையாய்ப்*
*பார்க்கிற் பரமதன் றுந்தீபற*
*பாவனைக் கெய்தாதென் றுந்தீபற.* 9

நினைத்தபோது தோன்றியும் நினையாதபோது தோன்றாமலும் இறைவன் இருக்கப்பெறும் நிலை. மேலான ஞானநிலையன்று, அது பாவனை நிலை. அந்நிலைக்கு அப்பாற்பட்டவன் கடவுள் என்றறிக.

*அஞ்சேஅஞ் சாக அறிவே அறிவாகத்*
*துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற*
*துய்ய பொருளீதென் றுந்தீபற.* 10

ஐந்தெழுத்தின் வைத்து இறைவனை வழிபடும் ஞான முறையைப் பின்பற்றித் தனது அறிவைச் சிவஞானத்தோடு இரண்டறத் தொடர்பு படுத்தித் தூய அறிவுடைய் முதல்வனைக் காண்க.

*தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்*
*நோக்கிற் குறையுமென் றுந்தீபற*
*நோக்காமல் நோக்கவென் றுந்தீபற.* 11

உலக அறிவோடு கலந்தும் கலவாது நின்ற கடவுள். ஆராய்ச்சியறிவிற்கும் புலனாகான்; சுட்டறிவால் பாராமல் திருவருட் கண்ணால் அவனைப் பார்த்தல் வேண்டும்.

*மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்*
*சாலப் பெரியரென் றுந்தீபற*
*தவத்தில் தலைவரென் றுந்தீபற.* 12

மூலையாகிய உடம்பினிலிருந்தவரை அருள் வெளியாகிய முற்றத்தில் விட்டவர் எப்பொருளிலும் பெரிய இறைவரென்றுணர்க. தவத்திற்குத் தக்க பயனளிக்கும் தலைவர் இவரே என்றுணர்க.

*ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்*
*தேட்டற் றிடஞ்சிவம் உந்தீபற*
*தேடும் இடமதன் றுந்தீபற.* 13

போக்குவரவின்றி ஒழிவற நிறைந்த ஞானமாகிய ஊரினையடைந்து. ஆராய்ச்சி ஒழிந்து நிற்கும் நிலையில் சிவம் விளங்கும். அந்நிலையில் ஆராய்ச்சி நிகழ இடம் இல்லை.

*கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி*
*உடந்தை யுடனேநின் றுந்தீபற*
*உன்னையே கண்டதென் றுந்தீபற.* 14

பாசத்தோடு கூடியிருந்த காலத்தில் மறைந்து கிடந்த அருட்சத்தியை. உன்னை ஆட்கொள்ளும்படி செய்யும் தீக்கையினாலே, ஆசிரியர் விளக்கியவுடன் அச்சத்தியோடு உடனாய் நின்று அருள்வழி ஒழுகுக.

*பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில் அப்*
*பற்றை அறுப்பரென் றுந்தீபற*
*பாவிக்க வாராரென் றுந்தீபற.* 15

எல்லாவகை உலகப் பற்றுக்களையும் அறுக்கவல்ல திருவருட்பற்றினைப் பற்றினால், அத்திருவருள் பிற பற்றுக்களை ஒழிக்கும். அங்ஙனம் பற்றொழியாது பாவிப்பதனால் இறைவன் வெளிப்படான்.

*உழவா துணர்கின்ற யோகிகள் ஒன்றோடுந்*
*தழுவாமல் நிற்பரென் றுந்தீபற*
*தாழ்மணி நாவேபோல் உந்தீபற.* 16

உலகப் பற்றிலழுந்தாது மெய்ப்பொருளை உணர்கின்ற யோகிகள். தொங்குகின்ற மணியின் நாவைப்போல ஒன்றினும் பற்றாமல் அசைவற நிற்பர்.

*திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று*
*நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற*
*நேர்பட அங்கேநின் றுந்தீபற.* 17

உள்ளத்துள்ளே இறைவரை நினைந்து அசைவற நிற்கும் யோகிகட்குத் திருச்சிலம்போசையாகிய நாத தத்துவம் தோன்றும். அதன் வழியே சென்று ஐந்தொழிலை நடாத்தும் இறைவனைக் கண்டு வணங்குக. அங்கிருந்து பிறழாமல் நேர்பட ஒழுகுக.

*மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்*
*அருளை மறவாதே உந்தீபற*
*அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற.* 18

இறைவன் அருளை மறவாது நிற்பின், மயக்கமும், திரிபுணர்ச்சியும்தொலையும். அவ்விருளைப்பற்றி நிற்பதொன்றே ஈண்டுச் செயற்பாலது.

*கருது வதன்முன் கருத்தழி யப்பாயும்*
*ஒருமகள் கேள்வனென் றுந்தீபற*
*உன்ன அரியனென் றுந்தீபற.* 19

அங்ஙனம் அருள்வழி உறைத்து நிற்பின் ஒப்பற்ற அருட்சத்தியின் கணவராகிய பெருமான் தன்னைக் கருது முன் சுட்டறிவு ஒழியும்படி அறிவிற் பதிந்து நிற்பன. அவன் பிறவழியால் நினைத்துப் பெறமுடியாதவன் என்று அறிக.

*இரவு பகலில்லா இன்பவெளி யூடே*
*விரவி விரவிநின் றுந்தீபற*
*விரைய விரையநின் றுந்தீபற.* 20

ஆணவத்தோடு கூடிய நிலையாகிய இரவும். மாயையுடன் கூடிய நிலையாகிய பகலும் இல்லாத தூய ஞானத்தோடு கூடிய இன்ப வழியிலே இடைவிடாது. வினைக்கு அஞ்சி விரைந்து சென்று பொருந்துக.

*சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்(கு)*
*அல்லனாய் ஆனானென் றுந்தீபற*
*அம்பிகை பாகனென் றுந்தீபற.* 21

தன்னியல்பில். இறைவன் நூல்களால் பேசப்படும் பொருள்களும் பேசப்படாத பொருள்களும் அல்லாதவனாயிருந்தும், உயிர்களின் பொருட்டு அவையாய் நிற்கின்றான். அதற்குக் காரணம் அவன் கருணையாகிய சத்தியோடு கூடியிருத்தல் ஆகும்.

*காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்*
*ஆற்றுவ தாற்றலென் றுந்தீபற*
*அல்லாத தல்லலேன் றுந்தீபற.* 22

வெளிச்செல்லும் மூச்சுக்காற்றினை உள்ளே சென்று அடங்கும் படியாக மாற்றி, புறத்தே செல்லுங் கருத்தினைக் கருத்துக்குக் கருத்தாகிய கடவுள்பால் பதிவிப்பதே ஆற்றல் என்றறிக. பிற செயல்கள் துன்பந்தருவன ஆகும்.

*கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்*
*வெள்ள வெளியாமென் றுந்தீபற*
*வீடும் எளிதாமென் றுந்தீபற.* 23

சிவபெருமானாகிய கள்ளரோடு உடம்பாகிய வீட்டையுடைய உயிர் கலந்துவிட்டால் அதிலுள்ள சரக்காகிய வினைகளெல்லாம் அறவே ஒழியும் வீடும் எளிதாம் என்றறிக.

*எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்*
*விட்டார் உலகமென் றுந்தீபற*
*வீடேவீ டாகுமென் றுந்தீபற.* 24

ஐம்பூதமும் மதியும் கதிரவனும் உயிரும் ஆகிய திரு மேனிகள் எட்டுங்கொண்டாராகிய இறைவர் திருவடியை இடைவிடாது தொட்டுக்கொண்டே நின்றவர் உலகத்தை விட்டார் ஆவர். விட்ட இடத்தே அவர் திருவடியே வீடாமென்றறிக.

*சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே*
*ஒத்ததே ஒத்ததென் றுந்தீபற*
*ஒவ்வாத தொவ்வாதென் றுந்தீபற.* 25

தன்னுணர்ச்சியும் கருவிகளினுணர்ச்சியும் திருவருளிலே அடங்கி ஒத்தநிலை ஏற்படுதலே வீட்டைதற்கு ஒத்த நிலை என உணர்க. ஒவ்வாத நிலை வீட்டு நெறிக்குப் பொருந்தாத நிலை என்றுணர்க.

*உள்ளும் புறம்பும் நினைப்பறில் உன்னுள்ளே*
*மொள்ளா அமுதாமென் றுந்தீபற*
*முளையாது பந்தமென் றுந்தீபற.* 26

அகவழிபாடும் புறவழிபாடும் ஒழிந்த அகண்ட வழிபாட்டிலே உலவாத இன்பம் உண்டென்றறிக. அந்நிலையிலே பந்தம் முளையாது.

*அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்(கு)*
*அவிழும்இவ் வல்லலென் றுந்தீபற*
*அன்றி அவிழாதென் றுந்தீபற.* 27

தன்னுணர்ச்சி நழுவிப் போதற்குரிய ஞானநெறி நின்றவர்க்குத் துன்பம் அகன்றொழியும். அல்லாதவர்க்குத் துன்பம் அகலாது.

*வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்*
*பித்தேறி னார்களென் றுந்தீபற*
*பெறுவதங் கென்பெண்ணே யுந்தீபற.* 28

எவற்றிற்கும் வித்தாகிய திருவருளை நாடிப் பெற்றுப் பாசமுளையைக் கை விட்டவர்கள் பேரன்பு மிகுந்தர்களாவர்கள். பேரன்பைப் பெற்றபின் பெறுதற்குரியது யாது?

*சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்*
*எல்லை சிவனுக்கென் றுந்தீபற*
*என்றால்நாம் என்செய்கோம் உந்தீபற.* 29

சிவனைக் கூடுகின்ற இடம் இன்னதென்று குறித்துச் சொல்ல முடியாது. அறிவாசான் உணர்த்த உணரும் ஞானமே அவனுக்கு எல்லை. அவ்வெல்லையைக் கூடினால் யான் எனதென்னும் செருக்கு அறும்.

*வீட்டில் இருக்கிலென் நாட்டிலே போகிலென்*
*கூட்டில்வாள் சார்த்திநின் றுந்தீபற*
*கூடப் படாததென் றுந்தீபற.* 30

இல்லறத்திலிருக்கினும் துறவறத்தில் புகுந்து அலைந்து திரியினும் ஞானமாகிய வாளினை உயிரின் பாதுகாப்புக்குத் துணையாகக் கைகொள்க. அங்ஙனங் கொள்ளாவிடின் வீடடைய முடியாது.

*சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்(று)*
*ஆவி யறாதேயென் றுந்தீபற*
*அவ்வுரை கேளாதே உந்தீபற.* 31

வீட்டினை நேராக அடைதற்குப் பயன்படாத வழி கூறும் பிற சமயங்களிற் புகுந்து நின்று உயிர்க்குறுதியை இழத்தல் கூடாது. பிறசமய உரைகளை மெய்யென்று நம்புதல் கூடாது.

*துரியங் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரந்*
*துரியமாய் நின்றதென் றுந்தீபற*
*துறந்தார் அவர்களென் றுந்தீபற.* 32

உலக உணர்ச்சியும் தன்னுணர்ச்சியும் கடந்த தொண்டர்க்கு நனவிலேயே தூய மேல்நிலை உணர்ச்சி நிகழும். அவர்களே உண்மைத் துறவிகள் என்றறிக.

*பெற்றசிற் றின்பமே பேரின்ப மாய் அங்கே*
*முற்ற வரும்பரி சுந்தீபற*
*முளையாது மாயைஎன் றுந்தீபற.* 33

அத்தகைய ஞானிகட்கு ஊழினால் எய்தும் சிற்றின்பம் திருவருட் கண்ணால் உணரப்படுவதாகலின் பேரின்பமாகவே முடியும். ஆதலால் மேல் வினையின் காரியமாக வரும் உடம்பெடுத்தல் நிகழாது.

*பேரின்ப மான பிரமக் கிழத்தியோ(டு)*
*ஓரின்பத் துள்ளானென் றுந்தீபற*
*உன்னையே ஆண்டானென் றுந்தீபற.* 34

அவர் பேரின்பமான பெருந்தலைவியோடு கூடி ஒப்பற்ற இன்பத்தை நுகர்ந்து கொண்டிருத்தலினாலே. அதன்கண் விளங்கும் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுப் பிற இன்பத்தை உணரார் என்றறிக.

*பெண்டிர் பீடிபோல ஆண்மக்கள் பேய்போலக்*
*கண்டாலே கண்டாரென் றுந்தீபற*
*காணாதார் காணாரென்று றுந்தீபற.* 35

பேய்க்கோட்பட்ட பெண்டிர்போல உயிரையும். பேய்போல நாயகனான கடவுளையும் கண்டறிந் தோர்களே கடவுளைக் கண்டவராவர். அங்ஙனம் தன்னை மறந்து திருவருட் பதிவுறாதவர்கள் குருடர்களே.

*நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்*
*நாலாம் நிலையாமென் றுந்தீபற*
*நாதற் கிடமதென் றுந்தீபற.* 36

உடம்பினுள் பிராணனும் நாதகலையும் கூடிச் சுழுமுனை வழியே உச்சியிற் சென்று சேரப்பெற்று அருள் வழியில் நிலையுறுவோரே நாலாம் நிலையாகிய வீட்டினை எய்துவர். அவ்வருள் வெளியே நாதனுக்கு இடமென்றறிக.

*சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி*
*நின்ற பரிசறிந் துந்தீபற*
*நீசெயல் செய்யாதே உந்தீபற* 37

சென்ற வழியெல்லாம் சிவன் வழி என்ற உணர்ச்சியோடு தன்செயலற்று நிற்கவேண்டும்.

*பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்*
*அக்கொழு நீயறிந் துந்தீபற*
*அறிந்தறி யாவண்ணம் உந்தீபற.* **38**

பொன்னினாலமைந்த கொழுவைக்கொண்டு வரகுவிளையும் நிலத்தில் உழுவதால் பயனென் அக்கொழுப்போல்வதாய் திருவருளின் தன்மையறிந்து உலகவாழ்விலே ஈடுபடாமல், சுட்டற்ற நிலையில் நிற்க வேண்டும்.

*அதுஇது என்னா அனைத்தறி வாகும்*
*அதுஇது என்றறிந் துந்தீபற*
*அவிழ்ந்த சடையானென் றுந்தீபற.* **39**

சுட்டியறியாது பொருள்களையெல்லாம் ஒருங் கேயறியும் பேரறிவுடைய பெருமான் உயிரோடு கலந்துநின்று உதவுகிறா னென்பதையறிந்து, அவனைச் சுட்டற்றநிலையில் நின்று அறியவேண்டுமென உணர்க.

*அவனிவ னான(து) அவனருளா லல்ல(து)*
*இவனவ னாகானென் றுந்தீபற*
*என்றும் இவனேயென் றுந்தீபற.* **40**

இறைவன் உயிரோடுகலந்தது தனது அருள்மிகுதியால் என்க. தன்னியல்பில் அவன் உயிரின் வேறாவனாதலின், உயிர் இறைவனாய் விடுமென்ற கருத்தை விட்டொழிக. உயிர் முத்தியை யடைந்தாலும் உயிரேயென்றறிக.

*முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்(து)*
*அத்தி பழுத்ததென் றுந்தீபற*
*அப்பழ முண்ணாதே உந்தீபற* **41**

முத்திபெறுவதற்குரிய முதன்மையுடைய உயிரின்பால் ஆணவமான மயக்கக்கொடி படர்ந்து, உடம்பாகிய பழம் பழுத்துப் பிறவி ஏற்பட்டது. அது முத்திக்குப் பகையாகலின், அப்பழத்தை நுகர்தற்கிட மில்லாதபடி திருவருளிலே உறைத்து நிற்க.

அண்ட முதலாம் அனைத்தையும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே உந்தீபற
குறைவற்ற செல்வமென் றுந்தீபற. 42

எல்லாவகைப் படைப்பையுமுள்ளடக்கிய மாயையினைப் பற்றிநில்லாதே. அதற்கு மேலான பூரணப் பொருளாகிய சிவமே பற்றத்தக்கது.

காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வறட்டுப் பசுக்களென் றுந்தீபற. 43

உடம்பினுள் வாழும்போதே இறைஞானத்தின் பயனான பேரின்பத்தை நுகராது, உடம்பால் வரும் மயக்கமிக்க சிற்றின்பத்தை உண்டவர்கள் பயன்படாத உயிர்களென உணர்க.

சிந்தையி னுள்ளும்என் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற. 44

திருவடி சென்னிமேற் சூட்டி மெய்ஞ்ஞானம் நல்கியும், உள்ளத்தாமரையில் ஞானபூசையேற்றும் என்னை ஆட்கொள்ள வந்தவர் தமது திருவருட் சத்தியோடு வாழ்க.

வைய முழுவதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை உந்தீபற
உணர்ந்தாராவர். 45

உலகினர் யாவர்க்கும் பாசநீக்கத்தைச் செய்யவல்ல உய்யவந்ததேவநாயனாரது நூலினை உணர்ந்தார் உண்மை உணர்ந்தாராவர்.

திருவுந்தியார் முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார்

# திருக்களிற்றுப்படியார்

பாடல் மற்றும் உரைநடை

*அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக*
*அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - அம்மையப்பர்*
*எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்*
*அல்லார்போல் நிற்பார் அவர்.* 1

சத்தி, சிவம் என இரு தன்மையுடைய ஒருவரே உலகுக்குத் தாயுந் தந்தையுமாவர். அவர் தமது அருட்சக்தியுடன் தோன்றிப் பக்குவப்பட்ட உயிர்கட்கு அருள்புரிவார். எல்லா உலகங்களுக்கும் அப்பாற் பட்டவராதலின் உயிர்களெல்லாம் தமது முயற்சியாலே அறியக்கூடாதவர், அப்பாற்பட்டாலும் உலகங்களிற் கலந்து அவற்றிற்றுடக்குறாது நிற்பர்

*தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்*
*தம்மில் தலைப்படுதல் தாமுணரின் - தம்மில்*
*நிலைப்படுவர் ஓரிருவர் நீக்கிநிலை யாக்கித்*
*தலைப்படுவர் தாம்அத் தலை.* 2

தம்மை யுய்விப்பான் எழுந்தருளிய அறிவாசான் சொல் வழி நின்று, தம்மறிவிலே சிவம் விளங்குவதையுணர்ந்தவர் தலைவனையும் தம்மையுமுணர்வர். அவர் தம்மை மறந்து தலைவனோடு பொருந்திநிற்பின், தலைவன் தன்மையையடைவர்.

*என்னறிவு சென்றளவில் யானின்று அறிந்தபடி*
*என்னறிவி லாரறிக என்றொருவன் - சொன்னபடி*
*சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான் எனக்கதனைச்*
*சொல்லக்கேள் யானுனக்கச் சொல்.* 3

ஒரு பேராசிரியர் தன்பால் ஞானநூல் கேட்கவந்த மாணவர்களை நோக்கி, எனது பசுபோதங்கெட்டச் சிவா நுபூதி நிலையில் நான் தெரிந்தபடி செருக்கற்ற நீங்கள் கேட்பீர்களாக என்று உபதேசஞ்செய்த நூலினைக் கேட்ட எனது ஆசிரியர் எனக்குச் சொன்னப்படியே நான் உனக்குச் சொல்லுகிறேன். நீ அதனைக் கேட்பாயாக. (திருவியலூர் உய்யவந்ததேவநாயனார்பால் உபதேசம் பெற்ற ஆளுடைய தேவ நாயனார் தமக்கு உபதேசித்ததை இந்நூலூாசிரியர் தமது மாணவருக்கு அறிவுறுத்துவதாகக் குறிப்பிடுகின்றார்.)

*அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்*
*சகளமயம் போல்உலகில் தங்கி - நிகளமாம்*
*ஆணவ மூல மலம்அகல ஆண்டனன்கண்*
*மாணவக என்னுடனாய் வந்து.* 4

பரஞானமாகிய அருள்வெளியிலே நின்று பக்குவம் அடைந்த உயிர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் கூத்தப்பிரான், என்னைப் பந்தப்படுத்தும் ஆணவமாகிய மூலமலம் என்னை விட்டொழியும்படி, அநாதியே உயிர்க்குயிராய் நின்று உண்மை அறிவத்தருளி, பக்குவ காலத்திலே ஆசிரியனாய்த் திருவுருக் கொண்டெழுந்தருளி வந்து ஆட்கொண்டனன். மாணவனே, நீ இதை அறிவாயாக.

*ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே*
*யோகங்கள் எங்கே யுணர்வெங்கே - பாகத்து*
*அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்*
*பெருவடிவை யாரறிவார் பேசு.* 5

அருள் வடிவுடைய மாதொருபாகன் அன்பர்க்குத் தோன்றி மெய்யினை அறிவுறுத்தாவிடின், சிறந்த சமய நூல்கள் எவ்வாறு உளவாகும்? ஆறுவகைப்பட்ட சமய ஒழுக்கங்கள் எவ்வாறு தோன்றும் அவற்றின் பயனான யோகமுயற்சியும் ஞானமும் எங்ஙனம் விளையும் இறைவன் இங்ஙனம் வந்து உணர்த்தாதவிடத்து அவன் பேரியல்பை யார் தானாக அறியமுடியும்?

*சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் றன்வசன*
*மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமோ - ஆர்த்தகடல்*
*தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ*
*தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு.* 6

மெய்ந்நூல் கற்றார்க்கு ஆசிரியன் அறிவுரை மாத்திரத்திலே உளதாகும் பெரும்பயன் விளையுமோ? கடல்நீர் குடித்தவர்க்கு விடாய் தணியாது. முகில் நீரை மொண்டு மழையாக நன்னீர் பொழிந்தால், அஃதே பயன்படும். அதுபோல அனுபவப் பயனை அறிவாசான் விளக்கினாலொழிய அறியமுடியாது.

*இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்*
*நின்ற மலமனைத்தும் நீக்குவதிங் - கென்றால்*
*உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்*
*உருவருள வல்லான் உரை.* 7

மலமெல்லாம் நாற்றமுடையவாயினும் புனிதமமைந்த பசுவின் மலமாகிய சாணம் பிற மலங்களனைத்தையும் நீக்கும். அதுபோல ஆசிரியனும் மக்களுள் ஒருவன் எனினும். சிவன் அவனை நிலைக்களமாகக் கொள்ளுதலினால், அவன் பிறவியை ஒழிக்கவல்லவன் ஆவன் என்றறிக.

*கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவரே*
*அண்டத்தின் அப்புறத்த தென்னாதே - அண்டத்தின்*
*அப்புறமும் இப்புறமும் ஆரறிவுஞ் சென்றறியும்*
*எப்புறமும் கண்டவர்கள் இன்று.* 8

ஆசிரியனாய் வந்த கடவுள் நல்கிய ஞானத்தைக் கொண்டு நிட்டைநிலை கைகூடப்பெற்றவர், இறைவனை உலகிற்கு அப்பாற்பட்டவன் என்று கூறாமல், உலகெங்கணும் உயிர்கள் யாவற்றினும் அவன் கலந்துநிற்கும் நிலையை அனுபவத்தாற் கண்டவராவர்.

மெய்யுணர்வுடையோர் இறைவனை அகண்டமாகக் கண்டு வழிபடுவார் என்பது கருத்து.

*அன்றுமுதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச்*
*சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலை - இன்றிதனை*
*யிவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்*
*அவ்வா றிருந்த தது.* 9

அயனரி முதலிய தலைவர்களுக்கும் இறைவன்றன்மை தெரிந்ததில்லை. அவனை அனுபவத்தாலுணர்ந்தவர்க்குந் தமது அனுபவம் எவ்வாறெனத் திட்பமாகக் கூறமுடியாது. வினவுவார்க்கு அது அநுபவித்தவாறு இருந்தது என்பதே அவர்களால் கூறமுடியும்.

*ஒன்றுங் குறியே குறியாத லால்அதனுக்*
*கொன்றுங் குறியொன் றிலாமையினால் - ஒன்றோ*
*டுவமிக்க லாவதுவுந் தானில்லை ஒவ்வாத்*
*தவமிக்கா ரேயிதற்குச் சான்று.* 10

சார்ந்த பொருளில் அதுவதுவாய் நிற்குந்தன்மை உயிர்க்குளது. அத்தகைய உயிர் முடிபாகச் சாரும் தன்மையின் வைத்து இறைவன் தன்மை துணியப்படுவதன்றி உலகிலுள்ள பிற எப்பொருளில் வைத்தும் அவனை அறியமுடியாது. ஏனெனில், எப்பொருளும் இறைவனுக்கு உவமையாவதில்லை. முடிபாகச் சாருந்தன்மை தவமிக்கோர்பால் காணப்படும்.

*ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை*
*மாற்றி அவ் வாற்றான் மறித்தாற்போல் - தோற்றிப்*
*புலன்களெனப் போதம் புறம்பொழியும் நந்தம்*
*மலங்களற மாற்றுவிக்கும் வந்து.* 11

ஆற்றுநீர் கடல்நீரோடுகலந்தபின், மீண்டும் ஆற்றிலே எதிர்த்துவரின் அது கடல்நீரின் தன்மையுடையதாம். அதுபோலச் சிவானுபூதிமான்கள் உடலிலே தங்கினும், புலன்வசப்படார்; சிவன் வயப்பட்டிருப்பர். அன்னோர் வாயிலாக இறைவன் தமது மலங்களைக் களைந்தொழிப்பன்.

*பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்*
*காலனைஅன் றேவிக் கராங்கொண்ட - பாலன்*
*மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்*
*கரணம்போல் அல்லாமை காண்.* 12

சிவஞானிகளுக்குக் கரணங்களெல்லாம் சிவகரணமாய்த் திரிபுற்றமை, பாலைநிலம் நெய்தலாகும்படி திருஞானசம்பந்தப் பெருமான் பாடியதும், அப்பர்பிரான் பாம்புவிடம் நீங்கும்படி பாடியதும், முதலைவாய்ப் பாலனைச் சுந்தரமூர்த்தி நாயனார் அழைத்ததும்பற்றி யுணர்ந்து கொள்க.

*தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்*
*தாங்களே சட்ட உறங்குவர்கள் - ஆங்கதுபோல்*
*ஐயன் அருட்டைக்கண் ஆண்டதற்பின் அப்பொருளாய்ப்*
*பைய விளையுமெனப் பார்.* 13

இறைவன் குருவாகி யெழுந்தருளியாட்கொள்ளு முன்னமேயே, அருள் வீழ்ச்சியினால் பக்குவமிக்க உயிர்கள் இறைவன் திருவருட் கடைக்கண் பாலித்து, ஆண்ட பின்னர். சிவமாந்தன்மையைத் தாமே மெல்ல மெல்ல எய்திவிடுவார். அது தூக்கமிக்காரைப் படுக்கையில் விட்டபின், உறக்கத்தை மற்றவர்கள் அவர்களுக்குக் கொடுப்பதில்லாமல் அவர்களே நன்றாகத் தூங்திவிடுவதைப்போலும்.

*உள்ள முதலனைத்தும் ஒன்ற ஒருவவரில்*
*உள்ளம் உருகவந் துன்னுடனாம் - தெள்ளி*
*உணருமவர் தாங்கள் உளராக என்றும்*
*புணருமவ னில்லாப் பொருள்.* 14

தன்னுணர்ச்சியோடு ஆராய்ந்து தெளியமுயன்றால், இறைவன் முன்னிற்கமாட்டான். உள்ள மலங்களெல்லாம் ஒடுங்கி அழியும்படி தம்மை மறந்து அன்புசெயின் உள்ளம் உருகும்படியாக இறைவன் உடன் கலப்பன்.

*நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்*
*நல்லசிவ ஞானத்தால் நானழியும் - வல்லதனால்*
*ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்*
*ஆரேனுங் காணா அரன்.* 15

பயன் கருதாது கைக்கொள்ளும் சிவனறமாகிய சரியை கிரியைகளில் நின்றாதல், நல்ல சிவயோகத்தினாலாதல், நல்ல சிவஞானத்தினாலாதல், யானென்னுந் தன்னுணர்ச்சி கெடும்படியாக யாராவது அன்புசெயின் யாருங்காணமுடியாத பெருமான் வெளிப்பட்டுத் தோன்றுவான்.

*மெல்வினையே யென்ன வியனுலகில் ஆற்றரிய*
*வல்வினையே யென்ன வருமிரண்டும் - சொல்லிற்*
*சிவதன்மம் ஆம்அவற்றிற் சென்றதிலே செல்வாய்*
*பவகன்மம் நீங்கும் படி.* 16

சிவனறமென்பது, மெல்வினையும் நிலவுலகத்தார் ஆற்றுதற்கரிய வல்வினையும் என இருவகைப்படும். பிறவிக்கு ஏதுவாய வினைநீங்கும்படி, அவ்விரண்டனுள் உனக்குப் பொருந்தியதொன்றை நீ கடைப்பிடிக்க.

*ஆதியை அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே*
*தீதில் திறம்பலவும் செய்வனவும் - வேதியனே*
*நல்வினையாம் என்றேம் நமக்கும்எளி தானவற்றை*
*மெல்வினையே என்றதுநாம் வேறு.* 17

முதல்வனை வழிபடற்குத் துணையாவன இயற்றுவது, பல்வகையாக அவனை வழிபடுவதும் எளிதாகச் செய்யக் கூடியவை என்னும் காரணத்தால், அவற்றை மெல்வினையென யாம் செப்பிய தென்றறிக.

*வரங்கள்தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்*
*கரங்களினால் அன்றுகறி யாக்க - இரங்காதே*
*கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை*
*வல்வினையே என்றதுநாம் மற்று.* 18

வரங்களைத்தரும் வயிரவவேடங்கொண்டுவந்த பெருமானுக்குச் சிறுத்தொண்டர். தமது கரங்களினாலே கறியாக்கும் பொருட்டுச்செய்த கொடுவினையாய பிள்ளைக்கொலை முதலியவற்றையே வல்வினை யென்றோம்.

*பாதக மென்றும் பழியென்றும் பாராதே*
*தாதையை வேதியனைத் தாளிரண்டும் - சேதிப்பக்*
*கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே*
*தன்டீசர் தஞ்செயலால் தான்.* 19

பாவமென்றும் பழியென்றும் பாராதே, அந்தணனாகிய தந்தையின் தாளினைச் சண்டேசுரர் சேதித்தபோது இறைவன் தானாகின்ற தன்மையை அவர்க்களித்தான்.

*செய்யில் உகுத்த திருப்படி மாற்றதனை*
*ஐய இதுஅமுது செய்கென்று - பையவிருந்து*
*ஊட்டி அறுத்தவர்க்கே ஊட்டி அறுத்தவரை*
*நாட்டியுரை செய்வதென்னோ நாம்.* 20

வயலிலே சுமரிற் சிந்திப்போன கட்டளைப் பொருளாகிய செந்நெலரிசி, செங்கீரை, மாவடு என்பனவற்றைச் சிந்தியவிடத்திலேயே இறைவன் அமுதுகொண்டருளும்பொருட்டுத் தனது ஊட்டியையறிந்த அரிவாட்டாய நாயனார், பெருமானுக்கு அமுதும் ஊட்டித் தமது பிறவியையும் அறுத்தனர். அவரை வல்வினைக்கு எடுத்துக்காட்டாகக் கூறுவதொழிய வேறு எவ்வாறு அவர் பெருமையை எடுத்துப்பேசுவது?

*செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்*
*பையக் கொடுத்தார் பரங்கெட்டார் - ஐயா*
*உழவும் தரிசும் ஒருமுகமே யானால்*
*இழவுண்டோ சொல்லாய் இது.* 21

தாம் அளவற்ற பேரன்பினாலே செய்யுஞ் செய்கையைச் சிவன் பொருட்டுச் செய்யுமுகத்தானே தம்மையும் அவனுக்கே மெள்ளக் கொடுத்துத் தற்போதமிழந்தவர்களே வல்வினையாளர். தன்னுணர்ச் சியற்றுத் தன் செயலைச் சிவன் செயலாக்கிவிடவே, கொடுவினையாகத் தோன்றுஞ் செயல் பெரும் புண்ணியமாயிற்று. கடன் கொடுத்தவர்க்கே கடனாளி தன் வேலையை உரியதாக்கிவிட்டால், கடனுந்தீர்ந்து தன் நிலத்தையும் பெற்றவனாதல்போலத் தன் செயலை இறைவனுக்கு உரியதாக்கிவிட்டால், கொடுவினையாகிய பாவமும் நீங்கிப் புண்ணியமும் உள்ளதாகும்.

*ஆதார யோகம் நிராதார யோகமென*
*மீதானத் தெய்தும் விதியிரண்டே - ஆதாரத்து*
*ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம் ஒன்று*
*ஆக்காப் பொருளேஒன் றாம்.* 22

ஆதார யோகமென்றும், நிராதார யோகமென்றும் யோகம் இருவகைப்படும். அவை இரண்டும் மேலான நிலையாகிய திருவடியின்கண் சேர்ப்பிக்கும். ஆதாரயோகம் திருவுருவ வழிபாடாகும். அதாவது உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களிலே பெருமானின் பல்வகைத் திருமேனிகளை நினைந்து பேரன்பால் வழிபட்டு ஒற்றுமையுறுதல், நிராதாரயோகம் அகண்டமான பெருமானை அருள்வெளியிலே நினைந்து அவனோடு ஒன்றுதலாகும்.

*ஆக்கி ஒருபொருளை ஆதாரத் தப்பொருளை*
*நோக்கி அணுவில் அணுநெகிழப் - பார்க்கில்*
*இவனாகை தானொழிந்திட் டேகமாம் ஏகத்து*
*அவனாகை ஆதார மாம்.* 23

உடம்பினுள் ஆறு ஆதாரத்திலொன்றில் இறைவனது திருமேனியை ஆசிரியன் காட்டிய முறையிற் கற்பித்து அதனை எண்ண எண்ணத் தன்னுணர்ச்சியானது கற்பித்த நுண்ணியவடிவத்தில் மறைந்தொழிய அவ்வடிவொன்றுமே தோன்றும். பின்னர் அவ்வடிவு தானாகவே தோன்றப் பெறுதலாகிய யோகமே ஆதாரயோகமாம்.

*கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்*
*கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட*
*இருபொருளும் அன்றியே இன்னதிது என்னாது*
*ஒருபொருளே யாயிருக்கும் உற்று.* 24

நினைப்பிற் கொண்டதொரு இறைவடிவத்தைக் கோடிபங்கில் ஒன்றாக நுண்ணியதாக எண்ணி நினைந்தால், நினைக்கின்றவனும் அத்துணை நுண்ணிய நிலையடைவன் பின்னர் நினைப்பான். நினைபொருளென்ற உணர்ச்சியும், செய்வது இன்னது என்ற உணர்ச்சியும் ஒழியவே நினைத்த ஒரு பொருளே முழுதுமாயிருக்கும்.

*அஞ்செழுத்து மேஅம்மை அப்பர்தமைக் காட்டுதலால்*
*அஞ்செழுத்தை ஆறாகப் பெற்றறிந்தே - அஞ்செழுத்தை*
*ஓதப்புக் குள்ள மதியுங் கெடில்உமைகோன்*
*கேதமற வந்தளிக்குங் கேள்.* 25

ஓங்காரமாகிய ஐந்தெழுத்தே உமையொருபாகனாகிய பெருமானைக் காட்டவல்லதாகலின், அவ்வைந்தெழுத்து ஆறு ஆதாரங்கட்கு அடிப்படையாய் நிற்கிற முறையையறிந்து, அம்மந்திரத்தின் நுண்பொருளை அறியப்புகுந்து, தன்னுணர்வு கெட்டால் உமை மணவாளன், மலமகல வந்தருளுவன்.

*ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினிலும்*
*தாக்கித்தான் ஒன்றோடும் தாக்காதே - நீக்கியுடன்*
*நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்*
*நிற்கை நிராதார மாம்.* 26

கற்பனை கடந்த பொருளாய் எல்லாப் பொருளிலுங் கலந்துங் கலவாது, உயிரின் உய்திக்குமாறாய பொருளை அகற்றி, தன்னை நீங்காது உடன்நிற்கும் அருட்சக்தியோடு கூடிய பெருமானோடு வேற்றுமையற நிற்றல் நிராதார யோகமாகும்.

*காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே*
*காண்கின்றார் காட்சியறக்கண்ணுதலைக் - காண்கின்றார்*
*காண்பானுங் காணப் படும்பொருளும் அன்றியே*
*காண்கையினாற் கண்டனரே காண்.* 27

ஞானக்கண்கொண்டு இறைவனைக் காண்கின்றயோகிகளே, அவனைச் சுட்டிறந்த நிலையிற் காண்கின்றார்கள், தான் அவனென வேறுபடுத்தறியாது அவனைக் காண்கின்றவர்களே உள்ளபடி அவனைக் கண்டோராவர்.

*பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்*
*பேசாமை செய்யும் பெரும்பெருமான் - பேசாதே*
*எண்ணென்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்*
*உண்ணின்றும் போகான் உளன்.* 28

நிராதாரயோகம் நிலைபெறும்படி பேசாமையாகிய மௌனம் கைக்கொள்ளலாம், மௌனமாயிருக்கின்ற முறையை ஆசிரியன்பாற் பெற்றறிந்து அம்முறையாலே மனமானது புலன்களிற் செல்லாமையைத் தலைப்பட்டவர்க்கு இறைவன் பிறவியை அறுத்தருள்வன். மௌனமாய் நினைவு இறைவன்பாலொன்றுபடுவண்ணம் யோகத்திருப்பவருடைய உள்ளத்தினின்றும் அவன் புறத்தே செல்லானென அறிக.

*ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்*
*தேட்டற்று நின்ற இடஞ்சிவமாம் - நாட்டற்று*
*நாடும் பொருளனைத்தும் நானா விதமாகத்*
*தேடுமிடம் அன்று சிவம்.* 29

ஓடியாடாதே அசைவின்றி முதல்வனை அறிகின்ற அறிவினைத் தலைப்பட்டு. அவனைத் தேடுதலில்லாது, நின்ற இடத்தே சிவம் வெளிப்படும். உலகிற்பொருந்தி விரும்பிய பொருள்களை யெல்லாம் பல்வகையாகத் தேடுவதுபோலத் தேடுமிடத்தே சிவம் விளங்காது.

*உணராதே யாதும் உறங்காதே உன்னிப்*
*புணராதே நீபொதுவே நிற்கில் - உணர்வரிய*
*காலங்கள் செல்லாத காலத்துடன் இருத்தி*
*காலங்கள் மூன்றினையும் கண்டு.* 30

உலகப் பொருள் எதனையும் அறிந்து பற்றாதே. உலகப் பொருள்களின் வேறாக நின்னைக் கண்டபோது எழும் நான் பிரமமென்னு மயக்கத்திலமுந்தாதே. கடவுளையும் ஆராய்ந்து

அறிந்துவிடலாமென்று எண்ணாதே. எவற்றிற்கும் பொதுவாய் நிற்குந் திருவருளோடு ஒன்றிநில். காலங்களைக் கடந்ததாய்க் காலவடிவமான பெருமானோடு காலமூன்றினையும் அவனுக்கு வேறென்றறிந்துநிற்க.

*பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து*
*பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - பற்றதனைப்*
*பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்*
*அற்றமிது சொன்னேன் அறி.* 31

பற்றுக்களில் விடுதற்கரிய பாசப்பற்றினைக் துடைத்தொழிக்கும் ஒப்பற்ற கருணைப்பரம்பொருளையறிந்து பற்றி. அதனைப் பிரிந்து தன்னை வேறாகப்பார்க்கின்ற பற்றையும் அறவே கைவிட்டால் அந்நிலையிலேயே சிவம் தானே விளங்கும். இதனை நன்றாக உணர்வாயாக.

*அறிவறிவாய் நிற்கில் அறிவுபல வாமென்று*
*அறிவின் அறிவவிழ்த்துக் கொண்டவ் - வறிவினராய்*
*வாழ்ந்திருப்பர் நீத்தோர்கள் மானுடரின் மாணவகா*
*தாழ்ந்தமணி நாவேபோல் தான்.* 32

தனது அறிவையே அறிந்து பற்றிநிற்பின், அது அசத்துப் பொருள்களிற் பற்றிப் பலவகைப்பட்டு ஒருமையுறாமையின், அறிவுக்கறிவாய் இறை ஞானத்திற்றன்னறிவு அடங்கப்பெற்று அப்பேரறிவின்கண் உளதாம் சிவானந்தத்தை நுகர்ந்து, தொங்குகின்ற மணியின் நாவேபோல், உலகப்பற்றின்றி வாழ்பவர்களே மனிதருள் துறந்தவராவர்.

*ஓசையெலாம் அற்றால் ஒலிக்குந் திருச்சிலம்பின்*
*ஓசை வழியேசென் றொத்தொடுங்கின் - ஓசையினின்*
*அந்தத்தா னத்தான் அரிவையுடன் அம்பலத்தே*
*வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து.* 33

உலகப் பற்றுக்கு ஆதாரமாய சுட்டறிவினை விளைக்கும் நால்வகைச் சொற்கள் காரணமாக வரும் ஓசைகளெல்லாம் அற்றால், நாதகலையாய முதல்வனது திருச்சிலம்பொலி கேட்கும்.

அதன்றன்மையையுணர்ந்து சென்றால், அது முடிந்தவிடத்தே சத்தியொடு கூடிய சிவம் விளங்கும்.

*சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையால்*
*சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு*
*கெடவொழுகல் நல்ல சமாதியுமாம் கேதப்*
*படவருவ தில்லைவினைப் பற்று.* 34

ஆசரியர் திருவள்ளுவனார் சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் என்றருளிச்செய்தமையால், சிவஞானத்தைக்கூடி நிற்றலே சிவநினைவாம். அச்சிவத்தை நினைக்கிறோமென்ற தன்னுணர்ச்சி கெட்டுவிடின் அதுவே நிட்டைகூடலாம். அந்நிட்டை கைகூடப்பெற்றால் பிறவிக்கு ஏதுவாய வினைப்பற்று ஏற்படாது.

*அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே*
*நின்றபடி யேநிற்க முன்னிற்கும் - சென்று*
*கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்*
*ஒருமகள்தன் கேள்வன் உனக்கு.* 35

பண்டுதொட்டு உன்னைக் கவர்ந்து மேற்சொல்லும் ஐம்புலனைப்பற்றி அவற்றோடு அலமராதே. அவற்றின் வேறாக நீ நின்றபடி நின்றால். நீ பற்ற நினைப்பதன்முன், அருட்சத்தி உன்னை விரைந்து பற்றவே, முதல்வனும் தன்னுணர்ச்சி கெடும்படியாகத் தோன்றி முன் நிற்பன.

*உண்டென்னில் உண்டாகும் இல்லாமை இல்லையெனில்*
*உண்டாகும் ஆனமையில் ஓரிரண்டாம் - உண்டில்லை*
*என்னும் இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்வகை*
*உன்னில்அவன் உன்னுடனே யாம்.* 36

உயிரறிவினாற்றேடிப் பெறுதல் கூடுமென்ற கருத்தோடு சென்றால், இறைவன் தோன்றானாதலின், அது கூடாதென்பதே முடியும். அவனையறிதலேயியலாதென்ற கருத்தினைப் பற்றின் அவனை அருளாலறியும் முயற்சியின்மையின், அது கைகூடாதென்பதே முடியும்.

ஆதலின், உண்டு இல்லையென்ற இருகருத்துமின்றி இறைஞானத்தால் அவனைக்கூட விரும்பியவிடத்தே அவன் உன்னோடுனாய்த்தோன்றி யாட் கொள்ளுவன்.

*தூல உடம்பாய முப்பத்தோர் தத்துவமும்*
*மூல உடம்பாம் முதல்நான்கும் - மேலைச்*
*சிவமாம் பரிசினையுந் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த*
*பவமாம் பரிசறுப்பார் பார்* 37

உயிர்க்கு ஐந்துடம்பாயமைந்த அசுத்தமாயை முதல் நிலமீறாகவுள்ள முப்பத்தொரு முதலும், அறிவின் மூலமாய நால்வகைச் சொற்கேதுவாய தூய முதல் சுத்த தத்துவம் நான்கும், இவற்றிற்கெல்லாம் அடிப்படையான நாததத்துவமாகிய சிவ முதலும் ஆகிய முப்பத்தாறும் உயிரின் வேறாய சடமெனவும். இவை தோன்றியொடுங்கு முறையீதெனவும் உணர்ந்தால், அவ்வுணர்ச்சியுடையோரே பிறவியறுக்கும் வகையறிந்தவராவர்.

*எத்தனையோ தத்துவங்கள் எவ்வெவர்கோட் பாடுடைய*
*அத்தனையும் சென்றங்(கு) அளவாதே - சித்தமெனும்*
*தூதுதனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற்*
*பாதிதனைக் கும்பிடலாம் பார்.* 38

அளவற்ற சமயக் கோட்பாடுகளையும் அன்னோர் கூறும் உண்மைகளையும் ஆராய்ந்து பார்த்து நேரம் போக்காது. உலகப் பொருள்களிற் செலுத்தும் சித்தமாகிய தூதுவனைத் தொலைத்து ஞானத்தை நாடிச்சென்றால் ஆராய்ச்சியைக் கடந்த அருட்சத்தி கூறனாகிய முதல்வனைக் கண்டு கும்பிடலாம்.

*சாம்பொழுதில் ஏதும் சலமில்லை செத்தாற்போல்*
*ஆம்பொழுதி லேஅடைய ஆசையறில் - சோம்பிதற்குச்*
*சொல்லுந் துணையாகும் சொல்லாத தூய்நெறிக்கட்*
*செல்லும் துணையாகும் சென்று.* 39

சித்த விகாரக் கலக்கமொழிந்த பெரியார்க்கு உடல் நீங்குங்

காலத்தே யாதொரு கலக்கமுமில்லை. உடலோடுள்ள போதே பற்றுவிட்டமையாற் செத்தாற்போன்ற நிலையடையதலின், சும்மாவிருத்தலாகிய சாதன நெறியும் ஏற்பட்டுச் சொல்லிலடங்காத ஞானநெறியிற் செல்லுதற்கும் அது துணையாமென அறிக.

*வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்*
*வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது - வேண்டினது*
*வேண்டாமை வேண்ட வரும் என்றமையால் வேண்டிடுக*
*வேண்டாமை வேண்டுமவன் பால்.* **40**

ஆசிரியர் திருவள்ளுவனார் விரும்புமிடத்துப் பிறவாமையை விரும்புக என்று கட்டளையிட்டமையால், அஃது தக்கனவல்ல. அப்பிறவாமை அவாவின்மையை விரும்பின் தானேவந்தெய்து மென்றமையால் நாம் வேண்டத்தக்க முதல்வனிடத்தே அவாவறுத்தலை வேண்டுக.

*அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில்*
*கரணமும் காலும்கை கூடும் - புரணமது*
*கூடாமை யுங்கூடும் கூடுதலுங் கூட்டினுக்கு*
*வாடாமை யுங்கூடும் வந்து.* **41**

பாதுகாப்பான திருவடி ஞானத்தைப் பெற்ற இடத்தே அதன்கண் நிலைபெறவேண்டும். சற்று அதனைவிட்டு உலகை நோக்கின், அந்தக்கரணத் தொர்பும், பிராணவாயுத் தொடர்பும் ஏற்படும். அன்றியும் இறைவனது முழுத் தன்மையை அனுபவியாமையும் ஏற்படும். அதனால் உடம்பு நீங்காமையும் உண்டாகும்.

*இன்றிங் கசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும்*
*சென்று தொடருமவன் சென்றிடத்தே - என்றுந்தான்*
*தீதுறுவன் ஆனால் சிவபதிதான் கைவிடுமோ*
*மாதொருகூ றல்லனோ மற்று.* **42**

பிறிதோருடம்பு வந்துற்றபோது இருவினைகளுஞ் சென்று பற்றும். அவற்றால் உடம்பு பெற்ற ஞானி தீங்கடைவனோவென்னில், அருட்சத்தி கூறனாய பெருமான் அவனைக் கைவிடமாட்டான். விட்டகுறையை முடித்து வீடடைவிப்பான்.

அநாதி சிவனுடைமை யால்எவையும் ஆங்கே
அநாதி யெனப்பெற்ற அணுவை - அநாதியே
ஆர்த்த துயரகல அம்பிகையோடு எவ்விடத்தும்
காத்தல் அவன்கடனே காண். 43

எஞ்ஞான்றும் எல்லாம் சிவனுடைமையாதலினால் எஞ்ஞான்றும் இருப்பதாய உயிரைத் தொடக்கமற்ற காலம் வருத்திய துயரத்தை எவ்விடத்திலும் நீக்கிக் காப்பது அருளன்னையுடன் கூடிய அப்பனது கடனாகும்.

தம்மிற் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பாம் மஞ்சனநீர் தாமாட்டித் - தம்மையொரு
பூவாக்கிப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை யன்றே உளன். 44

உயிரின்கண்ணே சிவவடிவமாகிய ஞானத்தைக்கண்டு வணங்கிச் சிவபெருமானுக்கு அன்பு நீரால் திருமஞ்சனமாட்டித் தன்னை அவனுக்கு வாடாத ஒரு மலராகச் சார்த்தி வழிபட்டால் உடல் மீண்டும் எடுத்தலாகிய பிறவியறும்.

தன்னைப் பெறுவதன்மேற் பேறில்லை தானென்றும்
தன்னைத்தான் பெற்றவன்தான் ஆரென்னில் - தன்னாலே
எல்லாந்தன்னுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
எல்லாமாய் நிற்கு மிவன். 45

தன்னைப் பெறுவதைப்பார்க்கிலும் சிறந்த பேறு இல்லையென்ப. எப்பொழுதும் தன்னைப் பெற்றவன் யார் என்றால், பாசத்தை அறிந்ததுபோலச் சிவத்தைத் தன்னறிவின் கண்ணே கண்டு, பற்றிய பாசப்பிணிப்பற்று இறைவனோடு கலந்து அகண்டமாய்நிற்கப் பெற்றவனே எனவுணர்க.

துன்பமாம் எல்லாம் பரவசனாய்த் தான்துவளில்
இன்பமாம் தன்வசனா யேயிருக்கில் - என்பதனால்
நின்வசனா யேயிருக்கில் நின்னுடனாம் நேரிழையாள்
தன்வசனா யேயிருப்பன் தான். 46

எல்லாப் பொருளையும் பற்றித் தம்வயமிழந்தால் துன்பமாம். தம்வயமுடைமையாலின்பமாம் என்ற கருத்தை ஆராய்ந்த நின்வசமாயிருப்பின், திருவருட்சத்தி மயமாய் நிற்கும் பெருமான், உன்னுடனேயிருந்து உனக்கு இன்பம் அளிப்பன்.

*செத்தாரே கேட்டார் கரணங்கள் சேர்ந்ததனோ*
*டொத்தாரே யோகபர ரானவர்க - ளெத்தாலு*
*மாராத வக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்*
*பேராமற் செல்வர்அதன் பின்.* 47

அந்தக்கரணத் தொடர்பு அற்றவரே பிறவியற்று முடிவாகிய இறப்பெய்தினவர்கள். தன்னைச்சேர்ந்த திருவருட் சத்திவழி நிற்பவரே யோகத்திற்றுறைபோகிய மேலோர், எல்லாவகையாலும் நிரம்பாத் தன்மையுடைய கரணங்களிற் கட்டுண்டு திருவருள் வயம் நில்லாதவர் அக்கரணங்கள் செல்லும் வழியெல்லாஞ் செல்வர்.

*கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங்*
*கண்ணுங் கருத்துங் களிகூர - நண்ணி*
*வடமடக்கி நிற்கும் வடவித்தே போல*
*உடனடக்கி நிற்பர்கா ணுற்று.* 48

கண் போன்ற புறக்கருவிகளாலும், மனம் போன்ற அகக்கருவிகளாலும் அறிதற்கரிய கடவுளை மனமும் கண்ணுங் களிகூரும்படிக் காணப்பெற்று, பெரிய ஆலமரத்தைத் தன்னகத்தடக்கி நிற்கும் வித்தேபோல அவரைப் பேரறிஞராய சிவனடியார்கள் தங்கள் அறிவகத்தடக்கி நிற்கும் தன்மையர் என அறிக.

*வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை*
*யூனகத்தே யுன்னுமதெ னென்றனையேல் - யானகத்து*
*வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா*
*வாதனமே யன்றோ வதற்கு.* 49

வானகமும் மண்ணகமுமாய எல்லாவிடமும் நிறைந்த பெரும்பொருளாகிய கடவுளுக்கு அவையெல்லாம் இருக்கையாம். அதுபோல அடியார் நெஞ்சகமும் அவருக்கு இடமாம். ஆயினும் பிறவிடங்களில் அப்பொருள் நன்கு விளங்காது அடியாருள்ளத்தே

